# ***சித்தார்த்***

---





மனிதன் தவிர்ந்த மற்றெல்லா உயிர்களும் அமைதியில் வாழ்ந்திட
ஆசை, ஆணவம், அறியாமை அலைக்கழிக்கும் மனித மனதில்
அமைதி நேற்றுமில்லை, இன்றுமில்லை, நாளையுமில்லை,
ஏன் என்றுமில்லை, நல்மனத்தவருக்கே அமைதி வரமான நிலை

வைகறை பூக்கப், பொய்கையில் அல்லியும்
தாமரையும் பூத்தாட, புள்ளினம் பூபாளம் பாட
நீந்தி விளையாடி, நீராடிக் களித்து நீண்ட நாள்
நட்பைக் கொண்டாடிய நண்பர்கள் இளைஞர்கள்

சித்தார்த் பிராமணன், கோவிந் சூத்திரன்
சாதியம் கடந்த உறவு, சாஸ்திரங்களை
ஏட்டுக் குப்பையெனக் கருதிய புரட்சியாய் வாழ்வு,
நல்வரவாய் இனி ஞானத்தேடலே இனி நம் வாழ்வு

***“ஓம்தத் ஸவிதுர்வரேண்யம்: பர் கோதேவஸ்ய தீமஹி
தியோ யோ ந ப்ரசோதயாத்”***

"ॐ भूर्भुवः स्वः।
तत्सवितुर्वरेण्यं।
भर्गो देवस्य
धीमहि। धियो यो
नः प्रचोदयात्॥"

பிரம்மத்தின் ஒளி , ஞானம், அன்பு நமக்கு பரிபூரணமாக
கிடைக்கட்டும், நம், சொல், செயல், சிந்தனை எல்லாம்
அவன் தரும் பிரகாசத்தின் வழியே நல்வழியில் இருந்து
நல்வழிக்கு நகரட்டும்-ஒலித்த காயத்திரி மந்திரம்

## ***பயணம்***

பூஜை முடித்த தந்தையை பூஜித்த மகன்
நண்பனோடு ஞானத் தேடலான வாழ்வுக்கு
ஆசியும், அனுமதியும் வேண்டி, தெண்டனிட்டு
பாதாரவிந்தம் பணிந்த தவப்புதல்வன்

இருவருக்கும் மனமுவந்து ஆசீர் வழங்கிய குருவோ
தன்னுள் முடித்த ஞான யாத்திரை, சாஸ்திரத்தால், ஏட்டுக்
கல்வியால் கற்றத்தர முடியாத ஞானத்தை-பிள்ளைகள்
பெற்றிட, தொடங்கிய பயணமோ தீர்த்த யாத்திரை

இளைஞர் இருவருக்கும் ஆசிர் வழங்கிய தந்தை,
கற்றவை கழித்து, கல்லாத சத்தியத்தை அனுபூதியில்
கண்டறிய வாழ்த்தி, மக்களே!. மறவாதீர், இருமை நிறைந்த
உலகில் உங்கள் பயணம், விழிப்புணர்வே தீபம்,

தெரிதலைக் கடந்து பயணியுங்கள்
சத்திய யாத்திரை புனிதமானது, சத்தியத்
தேடலான பயணம் மங்களமாகட்டும்
தந்தை காத்திருப்பேன் மறவாதே!



வேதம், சாஸ்திரம் நம்பிக்கை கடந்து
வாழ்ந்தறியும் உண்மையே மெய்ஞானம்
நில்லாது, கடந்து போங்கள், கடலைச் சேர
ஓடும் நதியாய் உங்கள் பயணம் அமையட்டும்

மகனே பாதை இருண்டு, பயணம் தடைப்பட்டால்
இதயம் நொருங்கி, வாழ்வு மாயை எனத் தோன்றினால்
திரும்பி வா, தந்தை காத்திருப்பேன், என் அன்பை
உனக்காய்ச் சேர்த்து வைத்திருப்பேன்

அன்பினால் நெகிழ்ந்த பிள்ளை மனம் தந்தையை
ஆரத்தழுவிட, மங்களம் உண்டாகட்டும்
ஒருவருக்கொருவர் துணையாயிருந்து-வாழ்வில்
உங்கள் அழைப்பை வாழ்ந்தறியுங்கள்

அனுபவமே ஆசான், அன்பில், உண்மையில்
நிலைத்து வாழுங்கள், தேடல் அபூர்வமானது
சத்தியம் வார்த்தை கடந்தது- தனி மனித
ஆன்மீகக் கிளர்ச்சியே ஞானத்திற்கு முதற்படி

உலகில் இன்பமுமுண்டு, துன்பமுமுண்டு
எதுவும் நிலையில்லை, எல்லாம் மாறிடும்
யதார்த்தத்தைப் புரிந்து பயணியுங்கள்
தெரிவு கடந்து விழிப்புணர்வோடு பயணியுங்கள்



ஞானத்தேடல் ஒரு தனி மனிதப் பயணம்
தன்னைத் தான் அறியும் மெய்ஞானமே விடுதலை
முள்ளும், மலருமான வாழ்வை வாழ்ந்தறியுங்கள்
தேடுங்கள் கண்டடைவீர்கள்

அருமைத் தந்தையையும், அன்புறவுகளையும் பிரிந்து
தேடலான யாத்திரை, வாழ்வில் அறியாததை
அனுபூதியில் அறிந்திட குதூகலமாய்த் தொடங்கிய
பயணத்திற்கு தந்தையின் அறிவுரையோ அழகிய முகவுரை

***நீண்டு விரிந்து கிடந்த பாதை***
***ஞானத்தேடலோ இளைஞர்களின் கீதை***

கூடு வெறுமையாக கூட்டை விட்டுப் பறந்த
குஞ்சுகள், தந்தை விழிகளில் துளிர்த்த கண்ணீர்,
ஆனந்தமும், ஆசிருமாகப் பூரித்த உள்ளத்தில்
உறவும், பிரிவும் கானல் நீர்





முள்ளோடும், மலரோடும் பூத்துக் குலுங்கிய ரோஜா
தென்றலில் அசைந்தாடி விடை சொன்னது, நெஞ்சில் ஆயிரம்
வண்ணக் கனவுகள் பூத்தாட, குருகுல வாழ்வு முடிபுக்கு வர
சத்தியத் தேடலான யாத்திரை ஆரம்பமானது

## தரிசனம்

இதுவரை அறியாத உலகில், அனுபவம்
கற்றுத்தரக் காத்திருக்க, அரும்பாகி, மலராகி,
காயான உள்ளங்கள், கனிவதும், வெம்பி
விழுவதும் காலத்தைப் பொறுத்தது?

பல மாதங்கள் தொடர்ந்த பயணத்தில் வனத்தே,
தனித்திருந்தும், கூடியிருந்தும் உலகைத்
துறந்த தவசிகள், கஞ்சா புகைத்து, களிகூர்ந்து,
மாயக் கற்பனையில் அவர்தம் சச்சிதானந்தங்கள்



சடை முடி தாடியோடு, நாறும் மேனியெங்கும்
நீறு தரித்து, வானை வெறித்த விழிகளில்
போதை, கஞ்சாவோ தஞ்சம்-அஞ்ஞான
உள்ளம் ருசிப்பதோ சின்மயம் என்ற மாயம்

புகைத்த கஞ்சாவும், அருந்திய சோமபானமும்
உடலுக்கு உபாதையாக, மனம் வெதும்ப,
இதுவல்ல ஆனந்தம், வனவாசி வாழ்வோ துன்பம்
அறிந்து கடந்து தொடர்ந்த பயணம்



மெய்ஞானத்திற்கு குறுக்கு வழிகள் உதவாது
முடங்கிப்போன தவசிகள் வாழ்வோ
எண்ணெய்யற்றுப் புகையும் திரி, தேடலைத்
தொலைத்த மூடர், முடமாகிப்போன அகக் குருடர்

சித்து விளையாட்டில் தம்மைத் தொலைத்த
பித்தர்கள், சித்தும், பித்தும் கடந்து
சிறுமை, பெருமை கழித்து, வாய்மையில் நிலைத்து
ஞானத்தேடலைத் தவமாக்கிய இளைஞர்கள்

## துறவு

**புத்தம் சரணம் கச்சாமி**
**தம்மம் சரணம் கச்சாமி**
**சங்கம் சரணம் கச்சாமி**

வாய்மைகள் நான்கு, துயர் போக்கும் வழிகளோ எட்டு,
சீலமோ ஐந்து, அறம், பொருள், இன்பமறிந்து துறந்து
மெய்ஞானம் கண்ட ஞானதீபம், உலகுய்ய தம்மத்தால் வழிகாட்டி,
உனக்கு நீயே ஒளியாகிப் போ! இசைபாடும் நறுமண தூபம்





இன்னிசையாய் காற்றில் கலந்து வந்த ஓசை
புத்த பெருமான் சீடர்களோடு வருகிறார் கட்டியமானது
கோவிந்தன் மனம் பரவசத்தால் துள்ள, கண்ட காட்சி
காந்தமாய் ஈர்த்திட, செல்லும் வழி புலனாகியது

ஞானத்தால் மிளிரும் அமைதி உயிர் மெய்யில் ஒளிர
சீவர ஆடையில் ஒளிரும் தீபங்களாய், பல நூறு
சீடர்கள் பின் தொடர, ஞான தீபமாய்
விழிப்புணர்வோடு கடந்து செல்லும் பெருமான்

உள்ளம் துள்ள, உவகை வெள்ளம் பெருக்கெடுக்க
நண்பா, என் அழைப்பைக் கண்டு கொண்டேன், விடை கொடு
பெருமானைச் சரணடைந்து, தம்மத்தின் பாதையில் ஞானம்
வரமாக, துறவு தவமாக, ஆரத்தழுவிப் பிரிந்த கோவிந்

பெருமானின் போதனையோ ஞான கீதை
ததாதகர் காட்டுவதோ பாதை
ஞானம் கிட்டுவதும், கிட்டாததும் நம் முயற்சி
பல சீடர்கள் முகத்திலோ பெருந்தளர்ச்சி





மழித்த சிரசும், பிட்சா பாத்திரமும், சீவர ஆடையும்
ஞானத்தின் களிப்பைக் காட்டவில்லை,
சோர்ந்த முகங்களில் ஆனந்தமில்லை,
இது என் பாதையில்லை தெளிந்த சித்தார்த் மனம்

நிரஞ்சனா நதி அமைதியில் இலயித்து
அன்ன நடைபோட்டு ஓடிட, படகுக்காரரோ
தன்னை மறந்து பாடலில் இலயித்திருக்க
அக்கரை செல்ல வேண்டிய இளைஞன்

***பயணம் தொடர்ந்திட பாதையோ நீண்டது***
***தனித்த மனதில் தனிமை வாட்டிட***
***பாசமும், நட்பும் பழங்கதையானது***

## சந்திப்பு

கூலி தரப் பணமில்லை, கூடி வரும் காலத்தே
ஒரு நாள் உம் கடன் தீர்ப்பேன், அக்கரை செல்ல
உதவுங்கள், அழகாய் புன்னகைத்த முதியவர்
அன்போடு கரை சேர்த்து வாழ்த்திய பெரியவர்





தனியனாய்த் தொடர்ந்த பயணம்-உடல்
தளர்ச்சியால் அழகிய நந்தவனத்தில்
ஓய்வு கொள்ள, ஆழ்ந்த உறக்கம் ஆட்கொள்ள
தன்னை மறந்து உறங்கிய கட்டழகன்

பண்ணோடு பிறந்த பாடல் துயில் கலைக்க
விண்ணொடும், முகிலோடும் விளையாடும்
வெண்ணிலவாய் பேரழகு பாடக் கண்டு, பாடுவது
தேவதையோ? மோகினியோ வியந்த மனம்

முழுநிலவோ?.நித்திலமோ? மங்கை, அங்கை மலரும்,
அடி தளிரும் கண்வண்டும், கொங்கை முகிலும்,
குழற்காரும் தாங்கிய பூந்தளிர், அஞ்சுகமோ?
என் நெஞ்சில் அரும்பும் காதற் சுகம் அருஞ்சுகமே

கண்காண கண்களுக்கோ இமைகளே சுமையான துன்பம்,
மொழிகேட்க, நெஞ்சில் கானக்குயில் பாடும் இன்பம்,
நடையிலே அன்னம் அசைந்தாட- மின்னல் இடை
மின்னி விளையாட, காமன் கணைபட்ட துன்பம் பேரின்பம்



மென்துகில் போர்த்த அழகில் மின்னும் பேரழகு,
வெண்சங்குக் கழுத்தில் பொன்னாரம், பிறை நுதலில் சுட்டி,
பூங்கரங்களில் முத்து வளையல், மனதைக் கவர்ந்தது
காதற்காமமோ? காதலில் வீழ்த்துவது காதல் புலமோ?

அணி எதற்கு? அணங்கோ சாயலில் தோகை,
பங்கய மேனியில் மோகனம், முத்துப் புன்னகையோ
சீதனம், சூடத் தருவாளோ கன்னி மனம்
காளை உள்ளத்திலோ காதலின் நறுமணம்

பொட்டு வைத்த வட்ட நிலவிற்குப் பூவிழிகள்
கட்டழகிற்கு கட்டியமாய் செவ்விதழ்கள், கார்குழல்,
செங்காந்தள் கரம், வெண்சங்குக் கழுத்து, நறுமணம்
சிந்தும் பூந்தளிர் மேனி, பொற்கலச மார்பில் சந்தனம்

***அணங்கோ அழகின் பேரவை***
***அழகன் மனதிலோ காதலின் பேரலை***

கண்களுக்கோ மங்கை வண்ண ஓவியம்
காதுகளுக்கோ குயிலின் மொழி தேவகானம்
சுவாசத்திற்கோ நங்கை மலர்மேனி பூமணம்
செவ்வாய் முத்தங்களோ திகட்டாத அமுதம்

கண்டு விழிகள் காதலாகிப் பூத்தாட
தேன் உண்ட மதுகாரியாய் மனம் ரீங்காரம்
இசைக்க, தேடல் மறந்து போனது
பெண் இன்பம் பேரின்பம் என்றானது





அண்ணலும் நோக்க. அவளும் நோக்க கண் பட்டு
காதலான மனம், செம்புலப்பெயல் நீர்போல் அன்பு
மனங்கள் கலந்திட, நாளும் காதலர் தினம், காஞ்சி இருக்க,
கலிங்கம் கலைந்த கதையான வாழ்வோ இன்பவனம்

ஆடலரசி, அவையில் பாடி ஆடும் பெண்ணரசி
வாழ்வில் வந்த கன்னி ராசி, ரிஷிபமோ
காளை ராசி, வாழ்விலோ யோகம், பருகப் பருக
விடாய்க்கும் காதற் காமமோ தணியாத பேரன்பம்

பொன்னில்லை, பெரும் பொருள் இல்லை
காதற் சுகம் தரும் கட்டழகனைக் கைவிட கன்னிக்கோ
மனம் இல்லை, பொருள் ஈட்டும் வழி காட்டி,
அழகனை பொருளாய் கொண்ட காதற் கள்ளி



பெண் இன்பம் சுவைக்க, பொருள் தேடி
வனிதையால் வணிகனோடு கொண்ட உறவு,
பொருள் சேர வாழ்வோ இன்பக் கனவு
காதலர் துய்த்த வாழ்வோ தேன் நிலவு



உயிர் மெய் கலந்திட சுகிர்த்த இன்பமோ
இருவருக்கும் வற்றாத பேரின்பம்
நெஞ்சம் பூசிய சுகந்தமோ பரிமளம்
நேசத்தில் கஸ்தூரிமானின் நறுமணம்

காலங்கள் உருண்டோட, காதற் காமத்தில் தேடல்
மறைந்திட, பொருள் கொண்டு சுகிர்த்த பெண் இன்பம்,
பெண்ணோ பொன்னுக்கு விலைபோகும் பெருந்துன்பம்
ஓர் இரவில் துறந்த இல்லறம்,

***அறம், பொருள் இன்பம் சுகிர்த்தும்***
***சத்தியமோ கிட்டாத பேரின்பம்***

## பிரிவு

***ஆடிய பொன்னூஞ்சல் அழகிழக்க,--காலத்தே***
ஆடிய சலங்கை ஒலியிழக்க, தோகை இழந்த மயிலாள்,
ஆண் குழந்தைக்குத் தாயான பெண்ணாள்,
பொன் வசந்தம் போனதென்று வாடி நின்ற குயிலாள்

அஞ்சனம் கரைய அழுது சிவந்த பூ விழிகள்
சந்தனமும், மலருமிழந்து வாடிய பொன்னுடல்
பொன்னோடு கூட வந்த கூட்டம் ஏமாந்து திரும்பிட
கண்வழி நுழைந்து நெஞ்சில் நிலைத்த காதல்



பண்ணோடு பிறந்தது பாடல், கண்ணோடு கலந்தது காதல்
இன்றோ பண்ணும் பிசகிட ஆடலும், பாடலும் ஓய்ந்திட
பஞ்சணை நொந்து பாலும் கசந்திட-நெஞ்சிலே வெறுமை
காதலாகிக் கரைந்த உள்ளத்தில் பிரிவின் கொடுமை



கழிந்தது இளமைக் களிமயக்கம்-தீர்ந்து
மறைந்தது காதற் காமம், ஒழிந்தது பொருள் ஊக்கம்
மனத் தொல்லைகள் நீங்கிட தொடர்ந்தது தேடல்,
எட்டாத வானிலே காயும் வெண்ணிலவாய் ஞானம்

பல்லாண்டு கழிந்தோட, அல்லலுற்ற வாழ்வு அமைதியிழந்து
நிரஞ்சனா நதி கரை நாட, புத்த பெருமானோ அக்கரையில்,
காணத் தவமிருந்து படகுக்காரருக்காய் காத்திருந்த
அலைமோதும் பெருங்கூட்டமோ இக்கரையில்

ஒரு கரையிலிருந்து மறுகரை சேரும் வாழ்வு
இரு கரைகளுக்குமிடையே கடல் தேடி ஓடும் நதியான
உலகோ மாயை-கரைசேர்க்கும் படகுக்காரரோ
உள்ளத்தில் கரை சேர்ந்த ஞானி, மனம் அழித்த யோகி



திடிரெனக் கூட்டத்தில் பெருஞ் சலசலப்பு,
மக்களிடையே அங்கலாய்ப்பு, வாய் நுரை கக்க
பெண்ணொருத்தி தரையில் கிடக்க,
சீறிப் படமெடுத்து, ஓடி மறைந்த கரு நாகம்

விரைந்தவன் பெண்ணிற்கு உதவத் துணிந்திட
மடியும் மங்கையோ வசந்தம் இழந்த பூவை
நந்தவனத்தின் கண்டு நல்லறம் நடத்திய கோதை
கண்டவள் விழிகளில் சோகப் புன்னகை

***மறவாத மங்கை நெஞ்சத்தில் ஆறாத காயம்***
***பொன், பொருளால் ஆறாத பாவம்***

# துயரம்

***காணத் தவித்து கடைசியில் உங்களைக் கண்டேன்***
வாழ்வு கசந்திட, பெருமான் புத்தரைத் தேடி வந்தேன்
இளமையும். அழகும் மாயை, மாறும் உலகில் மாறாதது
ஏதுமில்லை, உங்களால் கண்ட சுகம் பேரின்பம்



இதோ நாம் பெற்ற செல்வம், சிறுவனை கரம் பற்றி
கையில் அளித்தவள், பொன் அழிந்தது, பூவான அழகும்
அந்தியில் வாடியது, மெய் சுகமெல்லாம் பொய்
எனக் கண்டேன், மரணத்தில் உங்களைத் தரிசித்தேன்



உங்கள் மகன் நானறிந்த உண்மை,
தாய்மை பொய்யுரைக்காது, சொன்னவள் விழிகள்
சொருகிச் சோர, உடல் நீலம் பாரிக்க,
முத்தான புன்னகையோடு உறங்கிய நித்திலம்

தந்தை வழி அறமறிந்தேன், கோவிந் வழி
அரிய நட்பறிந்தேன், பொருளும், இன்பமும் தந்தை
என்ற பெருமையும் மங்கை உன்னால் அறிந்தேன்
பிரிவுத் துயர் அறிந்து பொருமிய மனம்

நெஞ்சம் நெகிழ கண்ணீர் அஞ்சலி செலுத்தி
உயிரோடு கலந்த உறவும் பொய்யாக
வாழ்வும் மாயை என்றாக, அறம் பொருள்
இன்பம் அறிந்த மனம் ஓவென்று அழுதது

தந்தையும் இறந்தார் என்ற சேதி -எரியும்
நெருப்பில் எண்ணெய் வார்த்த நிலையாக
விக்கித்த உள்ளம் விருப்பு, வெறுப்பு துறந்திட
கூடி வந்த ஞானம் குதூகலித்தது




உள்ளம் குமுற, உதடுகள் துடிக்க, கண்ணீர்
வெள்ளம் கரை புரண்டோட, அப்பா!, அப்பா
எனப் பிள்ளை மனம் கேவ, தந்தை வாழ்ந்த
திசை நோக்கி கரம் குவித்து அழுத முல்லை

ஆலாய் நிழல் தந்து, அன்பு வெள்ளத்தில்
என்னை மூழ்கடித்த இன்பக் கங்கை வற்றியதோ?
சோகம் நெஞ்சைக் கொல்ல, ஒரு கணம் சோர்ந்த மனம்
இதுதான் வாழ்வு, வருவதை விருப்பு வெறுப்பின்றி ஏற்ற தினம்



நீறான தேகம் நதி நீரோடு கலந்திட
நீரில் மூழ்கி நினைவைக் கழித்த மனம்
நெஞ்சமெல்லாம் ரணமாக-வருவதை
விருந்தாய் எற்ற பாவம் ஞானம்

துன்பத் தீயில் புடமிட்ட மனம்-ஆசை
ஆணவம் கழித்து பசும் பொன்னாய் ஒளிர்ந்திட
பார்வை தெளிந்திட, தூய மனம் ஒளிாந்திட
அமைதி வரமானது, சத்தியம் தரிசனமானது

பொன், பெண், பொருள் கண் மறைந்தது, பாசம், நேசம்
பழங்கதையானது, விருப்பு, வெறுப்பு கடந்து, எது நடந்ததோ
அது நன்றாகவே நடந்தது, எது நடக்கின்றதோ
அதுவம் நன்றாகவே நடக்கின்றது. மனம் சரணாகதி என்றது

குமுறிய மனம், கண்ணீரைக் கொட்டித் தீர்த்திட
கரம் பற்றிய சிறுவன் சோகத்தை கூட்டிட,
தாரத்தின் ஈமக் கிரியை முடித்து-தவமான தேடலில்
வரமான சிறுவனோடு கரை நாடிய சித்தார்த்



தனியே வந்து தனியே போகும் வாழ்வில்
பந்தப்படுத்தும் உறவுகள் பொன் விலங்கோ?
நதியில் மதிக்கும் கட்டைகள் கூடுவதும்-பின்
பிரிவதும் காலத்தின் கோலமே!

படகுக்காரரோ முதுமையின் உச்சத்தில், அக்கரை சேர வரம் கேட்க,
அக்கறையோடு அறிந்தவர் புன்னகைத்தார், இரு கரைகளுக்கிடையே
ஓடும் நதியாய் மனித வாழ்வு, கரைசேர்ந்தவர் பெருமான் புத்தரே,
மற்றெல்லாம் நதியில் மிதக்கும் தீய்ந்த கட்டைகளே

வரமாட்டேன் என்னைப் போகவிடு, சிறுவன் அடம் பிடிக்க
தந்தையின் உள்ளம் தவித்து வழி மறிக்க, அவன் வழியை
அவனே காணட்டும், போகவிடுங்கள், படகுக்காரரின் யோசனை,
தந்தையின் அன்பை நினைத்த மனதில் வேதனை



இன்பம், துன்பம் என்ற இரு
கரைகளுக்கிடையே நதிபோல் ஓடிய மனம்
கடலைச் சேர்ந்திட-நதி
கடலானது, அமைதி வரமானது

***பட்ட கடனை படகுக்காரரிடம் தீர்த்தவனுக்கு***
***மங்கையிடம் பட்ட கடன் பாரமானது, மனம் கேவியது***

எரியும் நெருப்பில் தந்தையின் உடலோ அங்கே தகனம்
மங்கையின் உடலோ எரி நெருப்பில் இங்கே சங்கமம்
துன்பத் தீயில் மனம் சங்கமிக்க, புடமிட்ட பொன்னாய்
மனம் ஒளிர, தூய மனதிற்கே வரமான சத்திய தரிசனம்
-----
அமைதி கண்டு ஆனந்தத்தில் நிலைத்த பெருமான்
பரிநிர்வாணமடைந்து சுடராய் மறைந்த அம்மான்
காலங்கள் பல கழிந்திட, ஊர் ஊராய்
தம்ம போதனை செய்த நடந்த பிக்கு கோவிந்,





## நட்பு

நிரஞ்சனா நதிக்கரையில் வாழும் படகோட்டியோ ஞானி,
உரையாடி உண்மை அறிந்தால் தெளிவுறும் மனமோ ஊருணி
கேள்வியால் அறிந்த பிக்கு மனம், துறவேற்றும் ஞானம்
கிட்டாது, தேடலை தவமாக்கிய ஞான குணம்

சந்திப்பில் ஆனந்தம், உரையாடலில் ஞானப் பேரின்பம்
இருமை நிறைந்த உலகு, எதையும் தேர்ந்தால் இழிவு
அனைத்தையும் ஏற்று உண்மையைக் நம்முள் காண்பதே
ஞானம், மனதை அலைக்கழிப்பதோ அஞ்ஞானம்

இருமை கலந்ததே முழுமை, இரு கரைகளுக்கிடையே
ஓடும் நதியாய் வாழ்க்கை அக்கரை சேர்வதே
பிறப்பறுக்கும் மானுட விதி, முதுமை மிளிர
ஞானம் ஒளிரப் பகர்ந்த வார்த்தையோ ஒளி





***வெளியே தேடி அலைந்தது வீணானது-உள்ளத்தில்***
***எல்லாம் இருப்பதைக் காண-துன்பம் துணையானது,***
மனம் திரும்பிய நிலை- மனமழிய, தேடிக் கண்டடைய
ஏதுமில்லை எல்லாம் நம்முள்ளே நிஜமானது

தட்டிடத் திறக்க கதவுகளில்லை-
எல்லாம் திறந்த நிலை-காணத்தான்
விழிகள் வேண்டும்-விழிப்புணர்வு கிட்ட
துன்பம்தான் அருமருந்தான நிலை

அறமறிந்து. பொருள் குவித்து, பெண் இன்பம்
சுகிர்த்து, பிள்ளை பெற்றுத் தந்தையாகி
தாரம் இறந்திட, தனயன் பிரிந்திட, தந்தை இறந்திட
மாயமான உலகோ பொன்மான் ஆனது

விருப்பு, வெறுப்பின்றி மனம் வாழ்வை
முழுமையாய் ஏற்றிட, காலத்தே
துன்பம் ஆறிட, ஆசை மனம் அழிந்தது
தூய மனம் தரிசனமானது

ஆணவம் கழித்திட, பெருஞ்சோகம் அருமருந்தானது
பூரண சரணாகதியில் தேடல் மனம் அழிந்து போனது
தூயமனம் பிறந்திட அமைதி சொந்தமானது



காலம், மொழிக்குள் அடங்காதது உண்மை,
வார்த்தைகளால் எச்சிலாக்கமுடியாத,
வாழ்ந்தறியும் சத்தியமோ மேன்மை

அறிதலால் அன்றி, வாழ்வின் பல நிலைகளில்
கிடைத்த அனுபவங்களின் புரிதலால்,
மனம் அடங்கிடக் கிடைத்த அமைதி



நதியைப்போலவே மனம், ஓடுகின்றது
ஆசை பெருக்கெடுக்க வெள்ளம் நிறைகின்றது
கோடையில் காய்ந்து, மாரியில் நிறைந்து
ஆயிரம் கதைகள் சொல்லும் நதி-ஞான குருவே

வெளியே தேடி உள்ளே கண்ட
பெருநிதி, கற்றுத்தர முடியாத சங்க நிதி,
நல்மனத்தவருக்கே அமைதி
சித்தார்த் மனதில் ஆனந்த அமைதி



பிரமச்சாரியாய் தொடங்கி, கிடைத்தவற்றை
மறுக்காமல் ஏற்று, கிரகஸ்தனாகி எல்லாமிழந்து,
சந்நியாசியாய் தன்னுள் உருமாறிய சித்தார்த்,
காலத்தே உள்ளத்தில் அமைதி கண்ட சந்நியாசி

அடையாளம் கண்ட உள்ளங்கள் ஆனந்தத்தில் திளைக்க
அன்பு நண்பனே நெற்றியில் முத்தமிடு, கோவிந் வேண்டிட
முத்தம் பதிய, முகத்தில் இளையோடிய ஆனந்தம்
இளமைக்காலத்தை அசைபோட்டு இன்புற்ற மனம்



துறவியின் ஆவி அடங்கிட, நண்பனை
இழந்த சோகம் நெஞ்சை வருத்திட
மாறும் உலகில் மாறாதது ஏதுமில்லை
மரணம் கூட வாழ்வின் முடிபு இல்லை

ஒரு கரையிலிருந்து, மறு கரை சேர்க்கும்
படகோட்டியோ உள்ளத்தில் மலர்ந்த
சந்நியாசி , வாழ்வோ ஞான உபதேசம்
வார்த்தையிலே உபநியாசம்-

பொட்டோடும், பூவோடும், பட்டோடு வாழ்ந்த உறவு,
பரிதவித்து அகாலமாய் மாண்டதும் கனவு
உறவாடிய நட்பு துறவாகி மடிந்ததும் கனவு
அரிய தந்தை உறவு மடிந்ததும் கனவு

பெற்ற பிள்ளை வேண்டாம் தந்தை என
என்னைத் துறந்ததும் கனவு,
நான் என்பதும் கனவு, நீ என்பதும் கனவு
உலகே ஒரு மாயக் கனவு



**நீறு, நாமம். காவி தரிக்காது-நெஞ்சம்**
**கண்ட ஞானம் வரமானது, பட்ட துன்பமே தவமானது**

ஓடும் நதிக்கரையில் ஒரு படகோட்டி
கரைசேர்க்கும் பணியோ துறவு-கனிந்த மனதில்
நடப்பது எல்லாம் நன்மைக்கே என்ற முடிபு
மெய்ஞானமோ விடுதலை என்ற அக்களிப்பு-
ஓம்!, ஓம்! ஓம்!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-15-08-2024*

The word Siddhartha is made up of two words in the Sanskrit language: siddha (achieved) + artha (what was searched for), which together means "he who has found meaning (of existence)" or "he who has attained his goals". In fact, the Buddha's own name, before his renunciation, was Siddhartha Gautama, prince of Kapilavastu. In this book, the Buddha is referred to as "Gotama".

Siddhartha,"** written by German author Hermann Hesse, is a philosophical novel set-in ancient India. The story follows Siddhartha, a young man on a quest for spiritual enlightenment. Despite his privileged life as the son of a Brahmin, Siddhartha feels unfulfilled and leaves his home to explore different paths to wisdom.

Throughout his journey, Siddhartha encounters various experiences and teachings. He first becomes an ascetic, renouncing all worldly pleasures, but finds this too extreme. He then meets the Buddha, Gautama, and is inspired by his teachings but chooses not to become a follower, believing that enlightenment cannot be taught but must be experienced personally.

Siddhartha then explores the material world, indulging in wealth, love, and sensual pleasures, but this too leaves him unsatisfied. Eventually, he retreats to a river where he finds peace and understanding by listening to its flow, realizing that enlightenment comes from accepting life in its totality, rather than escaping or resisting it.
The novel ends with Siddhartha achieving enlightenment and inner peace, having discovered that the truth he sought was within him all along, not in the teachings of others or the extremes of life.
"Siddhartha" is a profound exploration of self-discovery, spiritual growth, and the nature of enlightenment.

Major themes
In Hesse's novel, experience, the totality of conscious events of a human life, is shown as the best way to approach understanding of reality and attain enlightenment—Hesse's crafting of Siddhartha's journey shows that understanding is attained not through intellectual methods, nor through immersing oneself in the carnal pleasures of the world and the accompanying pain of samsara; rather, it is the completeness of these experiences that allows Siddhartha to attain understanding.

Thus, individual events are meaningless when considered by themselves—Siddhartha's stay with the Shramanas and his immersion in the worlds of love and business do not ipso facto lead to nirvana, yet they cannot be considered distractions, for every action and event gives Siddhartha experience, which in turn leads to understanding.

A major preoccupation of Hesse in writing Siddhartha was to cure his "sickness with life" (Lebenskrankheit) by immersing himself in Indian philosophy such as that expounded in the Upanishads and the Bhagavad Gita. The reason the second half of the book took so long to write was that Hesse "had not experienced that transcendental state of unity to which Siddhartha aspires. In an attempt to do so, Hesse lived as a virtual semi-recluse and became totally immersed in the sacred teachings of both Hindu and Buddhist scriptures. His intention was to attain to that 'completeness' which, in the novel, is the Buddha's badge of distinction." The novel is structured on three of the traditional stages of life for Hindu males (student (brahmacharin), householder (grihastha) and recluse/renunciate (vanaprastha) as well as the Buddha's Four Noble Truths (Part One) and Eightfold Path (Part Two) which form twelve chapters, the number in the novel. Ralph Freedman mentions how Hesse commented in a letter "[my] Siddhartha does not, in the end, learn true wisdom from any teacher, but from a river that roars in a funny way and from a kindly old fool who always smiles and is secretly a saint.

" In a lecture about Siddhartha, Hesse claimed "Buddha's way to salvation has often been criticized and doubted, because it is thought to be wholly grounded in cognition. True, but it's not just intellectual cognition, not just learning and knowing, but spiritual experience that can be earned only through strict discipline in a selfless life". Freedman also points out how Siddhartha described Hesse's interior dialectic: "All of the contrasting poles of his life were sharply etched: the restless departures and the search for stillness at home; the diversity of experience and the harmony of a unifying spirit; the security of religious dogma and the anxiety of freedom." Eberhard Ostermann has shown how Hesse, while mixing the religious genre of the legend with that of the modern novel, seeks to reconcile with the double-edged effects of modernization such as individualization, pluralism or self-disciplining.

The character Siddhartha honors the character Gotama (Gautama Buddha) by not following him in person, but by following Gotama's example. This is an example of the Theravada tradition evolving later, but modeled by the Buddha's philosophy and values.

இறுதிக்காலத்தில் கோவிந்தர் ஒரு புத்திமான் ஓட்டக்காரர் பற்றிக் கேட்டு சித்தார்த்தரைச் சந்திக்க பயணிக்கிறார். ஆனால் அவர் தனது பழைய சிறுவயதுப் பண்ணையாவான நண்பரை இனம் காணாமல் இருக்கிறார். கோவிந்தர் இப்போது முதியவரான சித்தார்த்தரிடம் அவருடைய ஞானத்தைப் பகிர்ந்து கொள்ளும்படி கேட்கிறார். அதற்கு சித்தார்த்தர் 'ஒவ்வொரு உண்மையான

கருத்துக்கும் ஒரு எதிர்மறையான கருத்தும் உண்மையாக இருக்கிறது மொழி மற்றும் நேரத்தின் கட்டுப்பாடுகள் மனிதர்களை ஒரு நிலையான நம்பிக்கையுடன் இணைக்கின்றன இது உண்மையின் முழுமையை கணக்கில் கொள்ளாது" என்று பதிலளிக்கிறார். இயற்கை ஒரு தன்னிறைவு கொண்ட சுற்றுச்சுழற்சியில் செயல்படும் என்பதால் ஒவ்வொரு பொருளும் அதன் எதிர்மறை அம்சத்தை உள்ளடக்கியிருப்பதால் உலகத்தை முழுமையாகவே கருத வேண்டும். சித்தார்த்தர் மக்களுக்கு உலகத்தை அதன் முழுமையில் அடையாளம் காணவும் அதை நேசிக்கவும் அறிவுறுத்துகிறார்.

பின்னர் கோவிந்தர் அவரது நெற்றியில் முத்தமிடும்படி சித்தார்த்தர் கோருகிறார். அவர் முத்தமிடும்போதுஇ சித்தார்த்தர் வாசுதேவனுடன் ஆற்றின் அருகில் காணக்கூடிய காலத்தின் எல்லைகளற்ற காட்சிகளை கோவிந்தர் அனுபவிக்கிறார். கோவிந்தர் தனது ஞானமிக்க நண்பருக்கு வணங்குகிறார்.

சித்தார்த்தர் பூரணமான விளக்கத்தை அடைந்தவர் என்ற மகிழ்ச்சியுடன் பிரகாசமாக சிரிக்கிறார். இவ்வாறு அவர் வாழ்க்கையின் முழு சுற்றத்தை அனுபவிக்கிறார். தன் பிள்ளை வெளியுலகத்தை ஆராய விடும் போது தானே ஒரு தந்தையாக மாறும்போது தன் தந்தையின் முக்கியத்துவத்தை மற்றும் அவனது அன்பை உணர்கிறார்.